மாதுலர் - அம்மான்மார்.
மாந்தர்கள் - மக்கள்.
மாபாதகம் - பெரும்பாவம்.
மாமூல் - வாடிக்கை.
மாயை - மாயம்.
மாய்ந்து - மடிந்து.
மாருக - மறுதலைபாக.
மாறுபட்டு - விரோதித்து.
மாற்சரியம் - பொருமை.
மாற்றலர்பால் - பகைவரிடத்தில்.
மானிடம் - { மநுஷ்யத்தன்மை. மநுஷப்பிறப்பு.

மி.

மிக்கார் - மேலோர்.

மு.

முகச்சாயை - முகச்சாடை.
முகந்து - மொண்டு.
முகப்பொலிவு - முகவிளக்கம்.
முக்குறும்பு எறிந்த - முக்குறும்பை வென்ற (முக்குறும்பு-காமம் வெகுளி மயக்கம் என்பன.)
முடை நாற்றம் - புலால் மணம்.
முட்டின்றி - தடையில்லாமல்.
முதுமை - கிழப்பருவம்.
முத்தம் - முத்து.
முத்தொழில் - மூன்று தொழில்கள் (சிருட்டி திதி லயங்கள்.)
முமுக்ஷுத்வம் - மோக்ஷ விருப்பம்.
முயற்சி - ஊக்கம்.
முரணி -
முரண்பட்டு - } மாறுபட்டு.
முழுமுதற்கடவுள் - மூலகாரணராகிய கடவுள்.
முறைப்பாடு - முறையிடுதல்.
முறையே - கிரமமாகவே.
முற்றத்துறத்தல் - முற்றும் விட்டு நீங்கல்.
முற்ருமை - முடியாமை.
முனிவர - முனிசிரேஷ்டரே.
முனிவுடன் - கோபத்துடன்.
முன்னவர் - முன்னோர்.

மூ.

மூண்டு - பற்றி.
மூதாதையர் - பாட்டன்மார்.
மூதுரை - முதுமொழி.
மூப்பு - முதுமை.

மெ.

மெய் - உடம்பு

மே.

மேகலை - மாதர் இடையிலணியும் அணிகளி லொன்று.

மை.

மைந்தன் - மகன்.

மொ.

மொழி - சொல்.

மோ.

மோகம் - விருப்பம்.

யா.

யாக்கை - உடம்பு.
யாண்டும் - எவ்விடத்தும்.
யாத்திரிகர் - பிரயாணிகர்.

யூ.

யூகிப்பது - உய்த்துணர்வது.

ர.

ரத்து - தடை.
ரவி - சூரியன்.

ஜ

ஜகம் - லோகம்.
ஜபதபாதி - ஜபதபம் முதலியவை.

ஜி.

ஜித்துக்காரி - கெட்டிக்காரி,

ஜீ.

ஜீவன்முத்தர் - ஞானிகள்.

ஸ.

ஸஹஸ்ரதளாம்புஜம்- ஆயிரமிதழுள்ள தாமரை மலர்.

ல.

லகிமா - அட்டசித்திகளுள் ஒன்று ; அது, லேசாயிருக்கும் சித்தி
லவுகிகம் - லோகாசாரம்.

லி.

லிகிதர் - எழுதுவோர்.

லோ.

லோபம் - லோபகுணம்.

வ.

வசித்வம் - அட்டசித்திகளுள் ஒன்று; அது எல்லோரையும் வசப்படுத்தும் சித்தி.
வண்ணம் - தன்மை.
வதியும் - தங்கும்.
வம்மின் - வாருங்கள்.
வயோதிகம் - மூப்பு.
வரலாறு - விருத்தாந்தம்.
வரினும் – வந்தாலும்.
வருத்தி - வருவித்து.
வருவாய் - வருமானம்.
வரைந்து - அளவுபடுத்தி.
வரையறை - எல்லை.
வலியுறுத்தத்தக்க - திடப்படுத்துதற்குரிய.
வல்லவன் - சமர்த்தன்.
வழக்காறு - வழக்கம்.
வழலை - ஒரு மருந்து (சவுக்காரம்).
வழிபட்டு - வணங்கி.
வழுவ - தவற.
வழுவாது - தவருது.
வறிதே - சும்மா.
வறியர் - தரித்திரர்.
வற்புறுத்தல் - இடித்துச் சொல்லல்.
வனப்பு - அழகு.
வன்மை - உறுதி.
வன்மொழி - கடுஞ்சொல்.
வன்னெஞ்சன்- கடினமனமுள்ளவன்.

வா.

வாகடம் - வாகடாசாரியரால் செய்யப்பட்ட ஒரு வைத்திய நூல்.
வாசவன் - இந்திரன்.
வாசாஞானம் - வார்த்தைஞானம்.
வாடை - மணம்.
வாணுள் - ஆயுள்.
வாணிபம் - வர்த்தகம்
வாதனை - வாசனை.
வாதித்தல் - தர்க்கித்தல்.
வாதை - துன்பம்.
வாத்ஸல்யம் - அன்பு.
வாயிலாக - வழியாக.
வாய்மை - உண்மை.
வாய்வாளாமை – மௌனம்.
வாரணாசி - காசி.
வாளாபோயினமை-சும்மாசென்றமை.
வானப்பிரஸ்தம் - நால்கை ஆசிரமங்களில் ஒன்று. (36 ஆம் பக்கம் 20 ஆம் வரியிற் காண்க.)

வி.

விகற்பங்கள் - வேறுபாடுகள்.
விஞ்ஞானம் - மேன்மையானஞானம்.
விடத்தேரிலை - ஒருவகைச் செடியின் இலை.
விடுதலை - விடுவிப்பு (மீட்சி).
விதேகமுக்தர் - உடல்விட்டு முத்தியடைந்தவர்.
வித்வஜ்ஜனர் - வித்வான்கள்.
விமரிசை - நாகரிகம்.
வியப்பு - அதிசயம்.
விரசம் - வெறுப்பு.
விரதியர் - விரதங்காப்பவர்.
விரிவஞ்சி - விரிவதற்குப் பயந்து.
விருத்தை - விருத்தாப்பியை.
விருப்பம் - ஆசை.
விரைந்தனன் - அவசரப்பட்டனன்.
விரையாதிபதி - செலவுக்கதிபதியாகிய புதன்.
விலக்குவிப்பது - ஒழிவிப்பது.
விலங்குகள் - மிருகங்கள்.
விழுப்பந்தரல்-மேன்மையைத்தருதல்.
விழைகின்ருள் - இச்சிக்கிருள்.
விழைந்தனன்-இச்சித்தனன்.
விழைவது-இச்சிப்பது.
விளித்து - அழைத்து.

வீ.

வீடுபேறு - முத்தியடைதல்.
வீற்றிருத்தல் - எழுந்தருளியிருத்தல்.

வெ.

வெஞ்சினம் - கடுங்கோபம்.
வெட்டை - சூடு.
வெம்மை - வெப்பம்.
வெய்யவன் - கொடியவன்.
வெறுமனே - சும்மா.
வெற்றி-ஜயம்.

வே.

வேள்வி – யாகம்.
வேனிற்காலம் - வசந்தகாலம்.

வை.

வைகறை - விடியற்காலம்.

செய்யுள்பாகத்தின்

## அரும்பத விளக்க உரை.

(பக்கம் என்று குறிப்பிடப்பட்டவைகள் இப்புத்தகத்திலுள்ள பக்கங்கள்.)

"ஒழுக்கம்" என்னும் பாட்டு. (பக்கம் i. திருக்குறள்.) ஒழுக்கம்—நன்னடக்கை, விழுப்பம்— மேன்மை, உயிரினும்—உயிரைக் காட்டிலும், ஓம்பப் படும்—காக்கப்படும்.

"வலம்பட" என்னும் பாட்டு. (பக்கம் v. நூலாசிரியர் இயற்றியது.)

வலம்பட—வலதுபுறமாகவர, வரிவடிவு—எழுத்து, இயன்று—அமைந்து, நலம்—மேன்மை, நலவும்-விளங்கும், பல்-பல, மொழி—பாஷை, தனி—ஒப்பற்ற. தமிழ் எழுத்துக்களில் பெரும்பாலானவை வலமாகச் சுழன்றுவரும் வரிவடிவினையுடையன. ட, ப, ம, ய, ழ, ஆகிய ஐந்துமே இடமாகச் சுழன்று வருவனவாம். பெரும்பான்மைநோக்கி வலம்படவரும் எழுத்துக்கள் என்பதே வழக்கு. இது, கமுகந்தோட்டத்தில் வேறுமரங்கள் சில இருப்பினும் பெரும்பான்மை நோக்கி அதனைக் கமுகந்தோட்டம் என்றாற்போல என்க. இதுவன்றி, மேற்கண்ட ஐந்து எழுத்துக்களும் வலத்திலிருந்து தொடங்கியே எழுதப்படவேண்டும்.

(†ட) ஆயினும் எழுதுவதில் சுலபமான முறை நோக்கி இடத்திலிருந்து தொடங்கி எழுதப்படுகின்றன (↓ட) என்று கூறுவாரும் உளர்.

"பிறர்க்கின்னா" என்னும் பாட்டு. (பக்கம் xviii. திருக்குறள்.)

இன்னா—துன்பம், பகல்-ஒரு முகூர்த்தகாலம்.

"பூமேவு" என்னும் பாட்டு. (பக்கம் xxiii. நூலாசிரியர் இயற்றியது.)

பூ—உலகத்தில், மேவும்—வியாபித்திருக்கும், சீர்—சிறப்பு, பொலியும்—விளங்கும், நா-(ஒவ்வொருவருடைய) நாவிலும், மேவும்—பொருந்திய, தூ—சுத்தம், அருளவரும்—அருள்செய்யும் பொருட்டு வரும், தந்திமுகத்து எந்தை—யானை முகத்தையுடைய எமதுதந்தை (விநாயகர்), தாள்—பாதம்.

"தெருளுறு" என்னும் பாட்டு. (பக்கம் xxiii. நூலாசிரியர் இயற்றியது.)

தெருள்-ஞானம், உறு—உடைய, மறை—வேதம், தேர்ந்து—உணர்ந்து, உண்மைப்பொருள்—சத்தியம், உற—மிகுதியாக, வேந்தன்—அரசன், புகல-சொல்ல, மருள்—மயக்கம், உறு—அடைந்த, மலரோன்-பிரமன், *மயல்—மயக்கம், செவ்வேள்—சுப்பிரமணியர், செய்ய—சிவந்த, முடி—தலை.

* பிரமன் ஓம் என்னும் பிரணவத்தின் பொருளையறியாது மயங்க அவற்கு அதனை முருகக்கடவுள் உபதேசித்து அருளினர் என்பது புராண வரலாறு.

"மின்னு" என்னும் பாட்டு. (பக்கம் xxiii. நூலாசிரியர் இயற்றியது.)

மின்னு—விளங்கும், மன்னும்—நிலைபெற்ற, மா—பெருமைபொருந்திய, பன்னு—புகழும், கமலம்—தாமரை, பால்நிறம்—வெண்ணிறம், அன்னம்—அன்னம்போன்ற சரஸ்வதியின், நல்—நன்மைபொருந்திய, சரண்—பாதம், ஆதர்ப்பாம்—விரும்புவாம்.

"வீடகமேவ" என்னும் பாட்டு. (பக்கம் xxiii. நூலாசிரியர் இயற்றியது.)

வீடுஅகம்—மோட்சமாகிய இடம், மேவ-அடைவதற்கு, விழைதல்—விரும்புதல், உறுநெறி—உற்றவழி, நாடுஅகம்—நாடுகின்ற மனம், இயம்ப—சொல்ல, ஆடகமன்று—பொன்சபை, பிரான்—சிவபெருமான், சேஅடி-சிவந்தபாதம்.

"தனித்தமிழ்" என்னும் பாட்டு. (பக்கம் xxiv. நூலாசிரியர் இயற்றியது.)

நீரார்—தன்மையுள்ளவர், மங்கல வழக்கு—அமங்கலத்தை மங்கலமாகச் சொல்லும் வழக்கம் (அதாவது சுடுகாட்டை நன்காடு என்பது), துனித்த—துன்பமான, போய்—பொய்யான தேகம், பனிப்பு—அசைவு (குற்றம்), காதை—கதை, பகர்ந்தனன்—சொன்னேன், தோனிப்பது—தோன்றுவது, தூயோர்—பரிசுத்தமான பெரியோர்.

"சத்தியம்" என்னும் பாட்டு. (பக்கம் xxiv. நூலாசிரியர் இயற்றியது.)

கணிதம்—கணக்கு, சமயம்—மதம், தகைமைத்து—தன்மையினையுடையது.

"உலகழுதல்" என்னும் பாட்டு. (பக்கம் 2. உபநிடதம்.)

உம்பர்க்கு—தேவர்க்கு, பரவிய—வழிபட்ட, அலைதிவலை நுரைகடலில் உதித்து ஒடுங்குமாபோல்—அலைகின்ற துளி (அல்லது அலையும் துளியும்) நுரைக்கின்ற கடலில் தோன்றி அதனிலேயே ஒடுங்குவதுபோல. (அலை திவலை—இதனைத் திரைகடலென்றாற்போல வினைத்தொகையாகக் கொள்க. உம்மைத் தொகையென்று கொள்வது மொன்று.)

"பாய்மைக்கல்" என்னும்பாட்டு. (பக்கம் 3. அரிச்சந்திர புராணம்.)

பாய்—(கரைமீது) மோதுகின்ற, மை—கறுத்த, கல்லோல—கல்லென்று சப்திக்கும், வேகச்சிலுத—விரைவாய்ப் பற்றும் துன்பம்.

"பாருக்கோருவன்" என்னும்பாட்டு. (பக்கம் 3. அரிச்சந்திரபுராணம்.)

பார்—பூமி, பரதாரம்—பிறன்மனைவி, போர்—சண்டை, மறைப்பொருள்—வேதத்தின்பொருள், நேர்—நடுவுநிலைமை, வீடா—விடாத, மனுநூல்—மனு என்பவரால் செய்யப்பட்ட தருமசாஸ்திரம், நெறி—வழி, பொறை—

பொறுமை, ஆருக்தும்—எப்படிப்பட்ட யோக்கியர்களுக்கும், மிக்கான்—சிறந்தவன்.

"வெய்யன்" என்னும் பாட்டு. (பக்கம் 4. அரிச்சந்திர புராணம்.)

வெய்யன்—கொடியவன், பதகன்—(பாதகன்) பாவி, நிறை—(மனத்தை) சிறுத்துதல், புல்லன்—அற்பன், கையன்—வஞ்சகன், கயவன்—கீழ்மகன், ஐயன்—தலைவன் (இந்திரன்), ஈதென்னுக—இது யாது பயனைக்கருதி.

"தீவேம்" என்னும் பாட்டு. (பக்கம் 4. அரிச்சந்திர புராணம்.)

செவ்வியோன்—செம்மையான குணமுடையவன், காய்வெந்திறல்—கோபிக்கின்ற கொடிய வல்லமை.

"கந்தரம்" என்னும் பாட்டு. (பக்கம் 8. நூலாசிரியர் இயற்றியது.)

கந்தரம்—குகை, உன்னும்—நினைக்கும், தூய—சுத்தமான, கோசிகன்—விசுவாமித்திரன், மாதவம்—பெருந்தவம், இணையடி—இரண்டுபாதங்கள்.

"வையம்" என்னும் பாட்டு. (பக்கம் 8. அபிராமி அந்தாதி.)

வையம்—தேர், துரகம்—குதிரை, மதகரி—மதயானை, மாமகுடம்—பெரிய கிரீடம், சிவிகை—பல்லக்கு, கனகம்—பொன், ஆரம்—முத்துமாலை, சின்னம்—அடையாளம்.

"வானவர்" என்னும் பாட்டு. (பக்கம் 9. அரிச்சந்திர புராணம்.)

கவண்சிலை—கவண்கல், மோனவேள்வி—மௌனவிரதம்பூண்டு செய்யும் யாகம்.

"கல்லாதபுல்லர்" என்னும் பாட்டு.(பக்கம் 14. நூலாசிரியர் இயற்றியது.)

புல்லர்—அற்பர், காவலன்—அரசன், சொல்-சொல்லுதலை, ஆரும்—பொருந்திய, (சொல்லாரும்-யாவராலும் புகழப்பட்ட,) கீர்த்தி—புகழ், *நல்லார்—நல்லவர், நாடிய—விரும்பின, அளிப்பான்—கொடுப்பான், மல்ஆரும்—மல்தொழிலைப்பொருந்திய, திண்புயம்—வலியதோள்.

* நல்லார் மனந்தனில் நாடிய—பெண்கள் தம்மனத்தில் விரும்பிய எனவும் கொள்க. இதனால் அப்பெண்கள் தம்கருத்தைக் குறிப்பித்தபடியாகும்.

"ஈயாதபுல்லர்"என்னும் பாட்டு. (பக்கம் 14. நூலாசிரியர் இயற்றியது.)

இறையவன்—அரசன், வாழ்த்துநர்—புகழ்வோர், அருள்வான்—கொடுப்பான், சேய்-பிள்ளை, மன்பதை-மக்கட்கூட்டம், மாயாத—அழியாத.

"நாயோக்கும்" என்னும்பாட்டு. (பக்கம் 15. கம்பராமாயணம்.)

நலப்பயப்பில்-நன்மைதருவதில், முன்னின்று-முன்னிலையாய்நின்று, செல்கதி—அடையும் நற்கதி, உய்க்கும்—செலுத்துகிற, நீரால்—தன்மையால், நோய்-பிணி, ஒக்குமென்னின்-வந்துஅடைந்ததானால், நுணங்கு-நுட்பமாகிய, கேள்வி-நூற்கேள்விகளை, ஆயப்புகுங்கால்-ஆராயத்தொடங்கும்பொழுதில்.

"புருவநேரியாமல்" என்னும் பாட்டு. (பக்கம் 19. திருவேங்கட சதகம்.)

மணி-முத்துப்போன்ற, எயிறு-பல், அங்கசேஷ்டை-உறுப்பை அசைத்தல், மிடறு - கண்டம், நியதியோடு - ஏற்பாட்டின்படி, நாதப்பிரமமாய்-ஒலிவடிவாகிய பிரமத்தில் லயித்தவனாய், தந்திரி-தந்தி, வஞ்சி-பூங்கொடி போன்ற பெண், மாந்தர்-மனிதர், வையகம்-பூமி.

"ஓத்தேறு" என்னும் பாட்டு. (பக்கம் 20. பிரபோத சந்திரோதயம்.)

ஓத்து-ஒப்பும், ஏறு-உயர்வும், பூங்கணை-புஷ்பபாணம், போதம்-அறிவு, மடவார்-பெண்கள், பித்து-பைத்தியம், இதம்-இன்சொல், பேதை-அறிவில்லாதவன்.

"புள்ளிய" என்னும் பாட்டு. (பக்கம் 23. திருவிளையாடற் புராணம்.)

புள்ளிய-புள்ளியையுடைய, ஆடை-வஸ்திரம், புனைந்து-தரித்து-அரவப்பூண்-பாம்பாகிய ஆபரணம், செங்கண்-சிவந்த கண்களையுடைய, விடையான் - ரிஷபவாகனத்தையுடைய சிவன், உள்ளிய - நினைத்த, அருவருந்து -இகழ்ந்து, தருக்கு-செருக்கு.

"வண்டுளரும்" என்னும் பாட்டு. (பக்கம் 34. திருவிளையாடற் புராணம்.)

வண்டு உளரும்-வண்டுகள் (மொய்த்துப்) பாடுகின்ற, தண் துழாய்-குளிர்ந்த துளபமாலையையுடைய, புண்டரீகப் போது உறையும் புத்தேள்-தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவன், அண்டர் தொழ-தேவர்களும் வணங்கும்படியாக, ஆலாலம் உண்டவனை-ஆலகால விஷத்தை உண்ட சிவபெருமானை.

"கருங்கோடி" என்னும் பாட்டு. (பக்கம் 34. சீவகசிந்தாமணி.)

கருங்கோடிப் புருவம்-கரியதும் ஒழுங்குள்ளதுமான புருவம், கயல் நெடுங்கண்-மீன் போன்றதும் நீண்டதுமான கண், அருங்கடி மிடறு-அருமையும் விளக்கமுமான கண்டம், அணிமணி எயிறு-வரிசையாயும் அழகாயுமுள்ள பற்கள், இருங்கடல்-விசாலமாகிய கடல், நவின்றதோ-பாடியதோ, நைந்தார்-உருகினர்.

"முடிசார்ந்த" என்னும் பாட்டு. (பக்கம் 37. பட்டணத்தார்.)

முடிசார்ந்த மன்னர்-கிரீடாதிபதிகளான அரசர், சாம்பர்-சாம்பல், இந்த-இப்படிப்பட்ட, படி-உலகத்தை, சார்ந்த-பொருந்திய, வாழ்வு-வாழ்க்கை, பொன்னின் அம்பலவர்-பொன்னம்பலத்தில் வாழ்பவராகிய நடராஜர், உய்ய வேண்டும்-கடைத்தேறவேண்டும்.

"ஞானமானது" என்னும் பாட்டு. (பக்கம் 38. மகாராஜா துறவு.)

நவில்வது-சொல்வது, இல்லாள்-மனையாள், அறையும்-சொல்லும், பதி-கணவன், ஈனமா-தாழ்வாக நினைத்து, கதி-திக்கு, எணி-எண்ணி.

"கொழுநன்" என்னும் பாட்டு. (பக்கம் 38. காசிகாண்டம்.)

கொழுநன்-கணவன், உறை-வாழ்தல், கொள்கை-கோட்பாடு, வழு-குற்றம், வான்தவம்-பெரிய தவம், ஆற்றுதல்-செய்தல், பராய்-வணங்கி, தூவுதல்-அர்ச்சித்தல், கற்புடை பன்னியர்-கற்புடைய மனைவியர்.

"பாகமொழியாய்" என்னும் பாட்டு. (பக்கம் 38. மகாராஜா துறவு.)

பாகமொழியாய் (பாகு+அம்+மொழியாய்)—(சர்க்கரைப்)பாகுபோன்ற அழகிய மொழியாய், உரை-சொல், விரதம்-நோன்பு, ஆகமுற-(ஆகம்+உற)-(நான்) இந்த சரீரம் எடுக்கும்படி.

"நின்னுவார்" என்னும் பாட்டு. (பக்கம் 40. தேவாரம்.)

நின் ஆவார்-உனக்கு ஒப்பாவார், மன் ஆனாய்-தலைவன் ஆனாய், மறை-வேதம், ஆறங்கம்-ஆறு சாஸ்திரம்.

"நாடுந்தந்தேன்" என்னும் பாட்டு (பக்கம் 41. தனிப்பாட்டு.)

விறல்சேர-வல்லமை பொருந்த, கோடு-கோட்டை.

"சடைபிடித்து" என்னும் பாட்டு (பக்கம் 49. அரிச்சந்திர புராணம்.)

மடைபிடித்தவயல்-நீர்பாய்கிற வழிகளையுடைய வயல், புரக்க-ஆள.

"அஞ்சாயன்" என்னும் பாட்டு (பக்கம் 49. அரிச்சந்திர புராணம்.)

அஞ்சாயன் மடவன்னத்து அணி தூவி-அழகிய சாயலையுடைய இளமையான அன்னத்தினது அழகான இறகு, அனிச்சந்தாலும்-அனிச்சமலரினாலும், செஞ்சாலி-ஒருவகையான சிறந்த நெல்.

"கொடி மீது" என்னும் பாட்டு. (பக்கம் 50. அரிச்சந்திர புராணம்.)

குஞ்சரம்-யானை, குழாம்-கூட்டம், படிமீது-தரைமேல், சுட்டபொடி மீது-சுடுகின்ற பொடிமணலின் மேல், குலக்குமரன்-தேவதாசன்.

"முல்லை முகை" என்னும் பாட்டு. (பக்கம் 50. அரிச்சந்திர புராணம்.)

முல்லை முகை நகையாள்-முல்லையரும்புபோன்ற பல்வரிசைகளுடையவள், மணவறை-பள்ளியறை, மலரணை-மலர்ப்படுக்கை, தொல்லை விதிப் பயன்-முன்னை விதிப்பயன், இரந்த-யாசித்த.

"வல்லார்க்கு" என்னும் பாட்டு. (பக்கம் 51. அரிச்சந்திர புராணம்.)

வல்லார்க்கு - வல்லவர்களுக்கு, மாட்டார்க்கு - வல்லமையில்லாதவர்களுக்கு, மறம்-வீரம், அல் ஆர்க்கும் குழல் மடவீர்-இருள்போல்வதாய் (வண்டுகளொலித்து மொய்ப்பதான கூந்தலுடைய பெண்காள், அறம்-தருமம். ஒருமையினால்-ஒருவிதமாகவே.

"கொண்டிருந்த" என்னும் பாட்டு. (பக்கம் 51. அரிச்சந்திரபுராணம்.)

பெருந்திருவும்-ஏராளமான செல்வமும், கொடி திண் தேரும்-கொடி கட்டின பலமான தேரும், பண்டுஇருந்த மாளிகையும்-முன்னே தாங்களிருந்த வீடும், பரிசனம்-ஊழியக்காரர், வண்டுஇருந்த தாரானும்-வண்டுகள் மொய்க்

கின்ற மாலையணிந்த அரசனும், வாள்நுதல்-ஒளிபொருந்திய நெற்றியையுடைய (சந்திரமதி.)

"இச்சைக்கி" என்னும் பாட்டு. (பக்கம் 52. அரிச்சந்திர புராணம்.)

இச்சைக்கு இதம் பேசி-ஒருவருடைய மனது சந்தோஷமாக அவருக்கு வேண்டிய நன்மைகளைச் சொல்லிக் கொண்டாடி.

"சந்திரகலையால்" என்னும் பாட்டு. (பக்கம் 52. அரிச்சந்திர புராணம்.)

சந்திரகலையால்-சந்திர கிரணத்தாலே, நெக்கு-கரைந்து அயன்-பிரம தேவன், முந்தவேவிதித்தவிதியினல்-முன்னே தானே அமைத்திருக்கின்ற அமைவினுலே, புந்தி-புத்தி, நிறை-உறுதிப்பாடு, பொறை-பொறுமை, தோற்றம்-அழகு.

"தோலேந்து" என்னும் பாட்டு. (பக்கம் 52. அரிச்சந்திர புராணம்.)

தோலேந்துமார்பு-மான்தோல் பூணுவதான மார்பு, மலர்த்தொடை-பூமாலை, கோடீரத்தின்மேல்-சடைமுடியின்மேல், காலேந்தி-கால்களைச் சுமந்து, கனல்-நெருப்பில், மூழ்கல்-இறத்தல், கழற்கால் வேந்தே-வீரக்கழலை யணிந்த அரசே.

"வெய்தா" என்னும் பாட்டு. (பக்கம் 53. அரிச்சந்திர புராணம்.)

வெய்தா-கோபத்தோடு, வெதுண்டு-கோபித்து, ஏனத்தை-பன்றியை, மண்டலம்-பூமி, ஐயம்-சந்தேகம்.

"சிறுந்தவர்" என்னும் பாட்டு. (பக்கம் 53. அரிச்சந்திர புராணம்.)

செவ்வியோய்-செவ்வைக் குணத்தையுடைய முனிவரே, பொறை-பொறுமை, முறை-நீதி, புலமை-அறிவு, ஒறுத்திடினும்-தண்டித்தாலும், மறுத்து-திரும்பவும், மாண்பு-மாக்ஷிமை.

"பொன்கேட்க" என்னும் பாட்டு. (பக்கம் 57. அரிச்சந்திர புராணம்.)

புன்மை-அற்பகுணம், மொழிவழவந்தெய்தும்-சொற் குற்றம் வந்தடையும், பொறுத்தும்-பொறுப்போம்.

"ஊட்டுவிப்பானும்"என்னும் பாட்டு. (பக்கம் 62. அரிச்சந்திர புராணம்).

மூட்டுவிப்பானும்-கூட்டுவிப்பவனும், மயங்குவிப்பானும்-கலக்கச் செய்பவனும், இருவினை-நல்வினை தீவினைகள், தில்லை-(தில்லை மரங்கள் அடர்ந்துள்ள வூர்.) சிதம்பரம்.

"அக்காலத்தமைச்ச"என்னும் பாட்டு. (பக்கம் 66. அரிச்சந்திரபுராணம்.)

அடல்வேந்தன்-வலிமைபொருந்திய அரசன், முக்காலங்களுமுணரும்-மூன்று காலங்களையுமறியும், இன்று யான்கொடுத்த மூதூர் தன்னில்-இன்று நான் கொடுத்ததான இந்தப் பழமையான ஊர்க்குள்ளே, ஏங்கி-துக்கித்து.

"நண்பினேடு" என்னும் பாட்டு. (பக்கம் 66. அரிச்சந்திரபுராணம்.)

நண்பினோடு-பிரியத்துடன், மின்-மின்னுகின்ற, புரிசை-மதிலையுடைய, விண்புலம்-ஆகாயம் வரையில், எழுந்த மதில் வேலிதனை-உயர்ந்துள்ள மதிலாகிய வேலியை, தண்-குளிர்ந்த, புனல்-நீர், வழங்கிடும்-பாய்கிற, தடங்களையும்-தடாகங்களையும், கண்புனல்-கண்ணினின்றும் ஒழுகுகிற நீர், சொரிந்து-ஒழுகவிட்டு, அழுது-அழுதுகொண்டு, காரிகை-பெண் (சந்திரமதி.)

"கோதிலா" என்னும் பாட்டு. (பக்கம் 69. அரிச்சந்திரபுராணம்.)

கோது இலா-குற்றமில்லாத, சுரம்-காடு, பணித்த-சொன்ன, பணி-ஊழியம், ஏதிலான்-அன்னியன், உறுதுயர்-அடைந்த துன்பம்.

"வாழ்வினை" என்னும் பாட்டு. (பக்கம் 69. அரிச்சந்திரபுராணம்.)

வாழ்வினை வளர்ந்தபொழுது-வாழுங் காலத்தைப் பெறுவதான நல்வினை வளர்ந்தபொழுது, என்னின்-என்னோடு, தாழ்வினை நிகழ்ந்தபொழுது-தாழ்வாகிற தீவினையுண்டானபோது, சூழ்வினை-பற்றியதீவினை, நமை-நம்மை, கடிது-விரைவு, ஊழ்வினை-விதிப்பயன், உளங்கவலொழிவாய்-மனக்கவலை ஒழிவாய்.

"மனிதர்" என்னும் பாட்டு. (பக்கம் 71. திருவிளையாடற்புராணம்.)

வசந்தம்-தென்றல், கால்-காற்று, துனி-(வெப்பத்தால் உண்டாகும்) துன்பம், புனிதம்-சுத்தம், தடம்-தடாகம், புது-புதிய, பால்மதி-வெண்மையாகிய சந்திரன்.

"துடைநிழல்" என்னும் பாட்டு. (பக்கம் 72. நறுந்தொகை.)

துஞ்சாய்-யானை, நண்ணினும்-அடைந்தாலும், நண்ணுவர்-அடைவார். (செல்வம் நிலையாது என்றபடி.)

"பூமகளும்" என்னும் பாட்டு. (பக்கம் 72. அரிச்சந்திரபுராணம்.)

பூமகள்-திருமகள், (லட்சுமி), மண்மகள்-பூமிதேவி, பொறுமல்-சகிக்காமல், உற-மனம்பொருந்த, (திருப்தியாக) மணித்தோள்- அழகியதோள், நாமம்-(பகைவருக்கு) அச்சத்தைத் தருவதான, நெடுவேல்-நீண்ட வேலாயுதத்தையுடைய, இறைவன்-அரசன், நாயின் இகழ்-நாயைக்காட்டிலும் இகழப்பட்ட.

"செய்தவ" என்னும் பாட்டு. (பக்கம் 75. அரிச்சந்திரபுராணம்.)

செல்வ-புத்திரனே, கைதவம்-வஞ்சனை, வருந்தலை-வருந்தாதை.

"மறைவழி" என்னும் பாட்டு. (பக்கம் 76. அரிச்சந்திரபுராணம்.)

மறை-வேதம், பிறர்மனை-பிறருடைய மனைவியர், பிறர்மனம் வைத்தேமாகில்-பரபுருஷரிடத்தில் அன்பு கொண்டோமானால், கனலாந்தேவே-அக்கினிக்கடவுளே.

"மானம்" என்னும் பாட்டு. (பக்கம் 76. நல்வழி.)

மானம்-பெருமை, வெட்கம், வண்மை-(சரீர) வளமை, தாளாண்மை-முயற்சி, தேனின்கசிவந்த சொல்லியர்-தேனின் ஊற்றைப்போன்ற சொல்லையுடைய பெண்கள், காமுறுதல்-விரும்புதல்.

"புவியினுக்கு" என்னும் பாட்டு. (பக்கம் 77. கம்பராமாயணம். இப்பாட்டு இறுதியிற் சிறிது மாற்றப்பட்டது.)

(இப்பாடல் கோமதி நதிக்கும் சான்றோர்கவிக்கும் பொருள்படுவதால் இது சிலேடைக் கவி எனப்படும்.)

கோமதிநதி: புவியினுக்கு அணியாய்-பூமிதேவிக்கு ஓர் ஆபரணம் போன்றதாய், ஆன்ற பொருள்தந்து-விஸ்தாரமான பொருள்களை (காடுபடு திரவியம், மலைபடுதிரவியம், கடல்படுதிரவியம், முதலாயினவற்றைக்) கொடுத்து, புலத்திற்று ஆகி-வயல்களில் பாய்வதாகி, அவி அகம் துறைகள்தாங்கி-அவிசு (தேவர் உணவு) பெய்தற்கிடமாகிய யாகத் துறைகளைத்தாங்கி, ஐந்திணைநெறி அளாவி-ஐந்து நிலங்களின் (குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல்) வழியிற்கலந்து, சவி உற தெளிந்து-அழகுபொருந்தத் தெளிவடைந்து, தண் என்று-குளிர்ந்து, ஒழுக்கமும் தழுவி-நேரே ஓடுதலையுங்கொண்டு.

சான்றோர் கவி: புவியினுக்கு அணியாய்-பூமியிலுள்ளவர்களுக்கு அழகைத்தருவதாய், ஆன்ற பொருள்தந்து-மேன்மையவான அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருளையுந் தந்து, புலத்திற்று ஆகி-ஞானத்தைத் தருவதாகி, அகம் அவி துறைகள் தாங்கி-பாவத்தைக் கெடுக்கும் வழிகளைத் தாங்கி, ஐந்திணை நெறியளாவி-(குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல்) ஐந்து திணைகளின் பாகுபாடுகளைக்கலந்து, சவி உறதெளிந்து-புகழ் உண்டாகத் தெளிவடைந்து, தண்ணென்று-இனியசொற்களை யுடையதாகி, ஒழுக்கமும் தழுவி-நல்லொழுக்கங்களையும் தழுவிக்கொண்டு.

சான்றோர் கவியெனக்கிடக்கும்-அறிவுடையோர் செய்த பாடலுக்குச் சமமாக இருக்கும், நல்கோமதியினை-நல்லகோமதி நதியை, காணப்பெற்றேம்-காணத் தகுந்த தவத்தையடைந்தோம்.

"இல்லறத்தான்" என்னும் பாட்டு. (பக்கம் 77. திருப்போரூர் சந்நிதி முறை.)

கடேறல்-கடைத்தேறல்.

"கண்டிகை" என்னும் பாட்டு. (பக்கம் 77. நூலாசிரியர் இயற்றியது.)

கண்டிகை (கழுத்திலணியும்) ருத்திராக்ஷமாலை, காட்டிடும்-பூசும், கோலம்-அழகு, கரகம்-கமண்டலம், தண்டம்-யோகதண்டம், ஆர்-பொருந்திய, செய்ய மண் திணி யாடை-சிவந்தமண்ணில் தோய்த்த வஸ்திரம், (காவி வஸ்திரம்.)

"பொருளுடையோரை" என்னும் பாட்டு. (பக்கம் 77. பட்டணத்தார்.)

செயல்-செய்யுங்காரியம், தெருள்-(கல்வியின்) தெளிவு, இருள் அறு சொல்-கேட்போரது அஞ்ஞான இருள் நீக்குதற்குரிய சொல்.

"அன்ப" என்னும் பாட்டு. (பக்கம் 78. நூலாசிரியர் இயற்றியது.)

முற்றி-முடித்து, இருநம்-பெரிய, வன்புகோய்து-வலியழித்து, சார்க-பொருந்துக.

"வாழ்வாவது" என்னும் பாட்டு. (பக்கம் 78. தேவாரம்.)

பிறவிக்கடல்-பிறவியாகிய கடல், பாழ்போவது-பாழாகக்கடவது, பசிநோய் செய்த பறிதான்-(வாழ்வு, செல்வம் முதலியவைகள்) பசிநோய் செய்யும் பறித்தற்றொழில் (பிடுங்குதல்), தாழாது-தாமதிக்காமல், தடங்கண்ணன்-விசாலம் பொருந்திய கண்களையுடைய திருமால், மலரோன்-தாமரைமலரை இடமாக உடைய பிரமன், கீழ்மேலுற-(முறையே திருமால் பன்றி உருக்கொண்டு) கீழ் நோக்கிச்செல்லவும், (பிரமன் அன்ன உருக்கொண்டு) மேலே செல்லவும், நின்றான்-ஓங்கிநின்ற (பரமசிவனது,) திருக்கேதாரம் என்னீர்-திருக்கேதாரம் என்று சொல்லுங்கள்.

"ஐயிரண்டு" என்னும் பாட்டு. (பக்கம் 80. பட்டணத்தார்.)

ஐயிரண்டு திங்கள்-பத்துமாதம், பையல் என்றபோதே-(பிறந்து) ஆண் குழந்தை என்று சொன்ன உடனே, பரிந்தெடுத்து-விரும்பி எடுத்து.

"எண்ணிலாத" என்னும்பாட்டு. (பக்கம் 65. திருப்போரூர் சந்நிதிமுறை.)
பாதவனசம்-பாததாமரை, துணை-இரண்டு.

"துடம்பை" என்னும் பாட்டு. (பக்கம் 81. குறள்.)

துடம்பை-முட்டை, தனித்து ஒழிய-தனித்துக்கிடக்க, புள்பறந்தற்று-அதனுள் இருந்த பறவை (பருவம் வந்தகாலத்து) பறந்துபோகும் தன்மையதாகும். உடம்போடு உயிரிடை நட்பு-உடம்புக்கும் உயிர்க்குமுள்ள சம்பந்தம்.

"மாதவர்வாழ்" என்னும் பாட்டு (பக்கம் 95. முற்பகுதி விறலிவிடுதூது.)

மாதவர்-தவசிரேஷ்டர்கள், கச்சி-காஞ்சீபுரம், ஈரெட்டாண் டெல்லையினில் உணர்ந்தேன்-பதினாறுவயதிற்குள் கற்றுக்கொண்டேன், கலைமகள்-சரஸ்வதி, விஞ்சை-வித்தை, மேட்டாய்-அளவாய், மன்னர் அவை-ராஜசபை, பூபாலர்-அரசர், நலம்வந்த-நன்மைபொருந்திய, தலம்-மேன்மை, வந்த-பொருந்திய, சிவிகை-பல்லக்கு, தண்டிகை-இருபக்கங்களிலும் திறந்திருக்கும் பல்லக்கு, கம்பமதக்கரி-கட்டுத்தறியில் கட்டப்பட்ட மதங்கொண்ட யானை, காஞ்சனம்-பொன், வாம்பரி-தாவிச்செல்லுங்குதிரை, மல்லல்-மிகுந்த, சித்திரமார்-விசித்திரம் பொருந்திய, ஒன்பான்வகையில்-ஒன்பதுவகையாக, ஒளிநம்-பிரகாசிக்கும், இன்பமான-(கண்ணிற்கு) இனிமையான, பணி-ஆபரணம், வியக்க-ஆச்சரியப்பட.

"பத்தனாய்"
"கருத்தனாய்"
"போய்வினை" } என்னும் பாட்டுகள். (பக்கம் 110. திருநாவுக்கரையர் தேவாரம்.)

ஆடல்-நடனம், காண்பான்-காண, காம்பு அன்ன தோளி-மூங்கில் போன்ற தோள்களையுடைய உமாதேவி, பங்கா-பாகனே, நிருத்தம்-நடனம், புறமலா அடிமை-(புறம் + அல்லா + அடிமை) அசத்தொண்டு, பைய-மெல்ல.

"மெய்யனே"
"மெய்யுந"
"தையலார்"
} என்னும் பாட்டுகள். (பக்கம் 110, 111. நூலாசிரியர் இயற்றியது.)

விமலா-மலமற்றவனே, கையனேன்-வஞ்சனேன், களைகண்-ஆதரவு, கருமம்போல்லேன்-(முன்ஜன்மத்தில்) தீச்செய்கையுடையேன், உய்ய-கடைத்தேற, செய்யுறுவளம்-வயல்களால் உண்டான வளம், தையலார்-மாதர், மையல்-மோகம், நெய்யில்-நெய்யினிடத்து, ஆர்-பொருந்திய, நிலவிய-நிலைபெற்ற.

"அல்லலே" என்னும் பாட்டு. (பக்கம் 141. காஞ்சிப்புராணம்.)

அல்லல்-துன்பம், கட்டழகு-பேரழகு, இரவலர்-யாசகர்.

"யானையெருத்தம்" என்னும் பாட்டு. (பக்கம் 142. நாலடியார்.)
எருத்தம்-பிடர், போலிய-விளக்கமாக, ஏனைவினை-தீவினைப்பயன், உலப்ப-கெடுக்க, வேறு ஆகி-செல்வத்தை இழந்து, வீழ்வர்-தாழ்வர் (வறியவராவர்), மற்றோர்-பிறர்.

"புலையனும்" என்னும் பாட்டு. (பக்கம் 145. அரிச்சந்திரபுராணம்.)

புலையன்-நீசன், புன்புலால்-இழிவாகிய மாமிச (பிண்டமான), யாக்கை-சரீரம், நிலையெனு-நிலையென்று, மருண்டு-மயங்கி, தலைமைசேர்-முதன்மை கொண்ட, கலையுணர்ந்த-கலைஞானங்களெல்லாம் தெரிந்த, கழறுவது-சொல்லுவது.

"எறும்பு"
"தாழ்குலத்தோர்"
} என்னும் பாட்டுகள் (பக்கம் 157. திருக்குற்றாலத் தலபுராணம்.)

கடை-முடிவு, தலை-தொடக்கம், பறம்பர்-மலைநாட்டார், சோனகர்-துருக்கர், சூனர்-ஊன்விற்போர், ஈனர்-சண்டாளர், கானவர்-வேடர், நுளையர்-வலையர், பழையர்-சாணர், சதுர்த்தர்-நான்காம் வருணத்தார், (சூத்திரர்), கேழ்-ஒளி, (கீர்த்தி), உழவர்-வேளாளர், சூழ-ஆலோசனையுடைய, வாழ்-வாழ்கின்ற, மறையோர்-வேதியர்.

"அந்தணர்"என்னும் பாட்டு. (பக்கம் 157. திருக்குற்றாலத் தல புராணம்.)

அகன்று-நீங்கி, மேனி-உடம்பு, சந்தம்-அழகு, பாலைத்தானம்-பாலைநிலம், கந்தல்-அழிந்துபோன, புனம்-கொல்லை, (மலைநாடு), ஒருவி-நீங்கி, முந்துற-முன்னாக, இத்தனைக்கு-இத்தனைவகையும் ஒழிய, முயன்று-முயற்சிசெய்து,
"வாழ்வாவது" என்னும் பாட்டு. (பக்கம் 166. தேவாரம்.) இதனுரையை 369-ஆம் பக்கத்திற் காண்க.

"சேய்மை" என்னும் பாட்டு. (பக்கம் 166. அரிச்சந்திரபுராணம்.)

சேய்மை-தூரம், அண்மை-சமீபம், உயிர்க்கோருதுணை-உயிருக்கு ஒப்பற்ற துணை, வாய்மை-சத்தியம், அகம்-மனது, தூய்மை-பரிசுத்தம், நோய்மை-துன்பம்.

"மந்திரவேதியர்" என்னும் பாட்டு. (பக்கம் 220. நூலாசிரியர் இயற்றியது.)

பேட்பு-விருப்பம், வர்த்து-மணஞ்செய்துகொண்டு, காயம்-உடம்பு, மதிசால்-அறிவுமிகுந்த, கோ-பசு, தானம்-கொடுத்தல், சொன்னம்-பொன், வயிறுவாய்த்தல்-கருப்பமடைதல், உவப்பு-மகிழ்ச்சி, எழில்-அழகு, அரோகம்-பிணியின்மை, முதுநீர்துத்தல்-கருப்பிணிகளுக்குச் செய்யுமோர் சடங்கு, அரணியம்-காடு, விடை-உத்தரவு.

"பனியா" என்னும் பாட்டு. (பக்கம் 228. அரிச்சந்திரபுராணம்.)

உலவாய்-அழியாய் (வாடாமல் இருந்தாயே), அனியாயவெங்கண் அரவால் இறந்த அதிபாவம் என்கோல் அறியேன்-யாரையும் கடிப்பதான அனியாயச் செய்கையையுடைய வெவ்விய கண்களோடுகூடின ஒருபாம்பினாலே நீ இறந்து போதலான அதிக பாபம் யாது செய்ததாலோ நான் தெரிகிலேன், தனியே கிடந்து விடநோய் செறிந்து தரைமீது உருண்ட மகனே-இங்கே நீ ஒருவனாய்க்கிடந்து விடமாகிய வியாதி மிகுத்து (விடத்தால் பீடிக்கப்பட்டு) மண்மேற் புரண்டுகிடக்கிற புத்திரனே, அவமே-வீணே.

"நிறையோ" { என்னும் பாட்டுகள். (பக்கம் 229. அரிச்சந்திரபுரா
"வானின்" { ணம்.)

நிறையோசை பெற்ற பறையோசையுற்று நிரையாய் நிறைந்த கழுகின்-நிறைந்த ஒலியைக்கொண்ட வாத்தியங்களின் முழக்கங்களில்லாமல் வரிசையாய் நிறைந்திருக்கிற கழுகுகளினுடைய, சிறையோசையுற்ற செடியூடிறக்க விதியாரிழைத்த செயலோ-சிறகடித்துக்கொள்ளுகிற சத்தங்களைக் கொண்ட செடிகளுக்குள்ளே நீ இறந்துபோக பிரமதேவன் செய்த செய்கைதானோ, மறையோன் இரக்க வளநாடனைத்தும் வழுவாது அளித்த வடிவேல்-விசுவாமித்திர முனிவர் யாசிக்க தனது வளநாடுமுழுதும் கொடுத்த கூரிய வேலாயுதத்தையுடைய, இறையோன் அளித்த மகனே உனக்கும் இதுவோவிதித்த விதியே-அரசன்பெற்ற புத்திரனே உனக்கு இதுதானோ விதித்தவிதி, நிரை-வரிசை.

வானின்று இழிந்து சோர்கின்ற தாரை மழைபோலவீழ விழி நீர்-ஆகாயத்திலிருந்திறங்கிப் பொழிகின்ற மழைத்தாரையைப்போல் கண்ணீரொழுகவும், ஊனின்றி மேனி யுதிரங்கள் சிந்த வுயிரின்றி-மாம்சமென்பதில்லாமல் தேகமுழுமையும் ரத்தமொழுகவும் பிராணபலமுமில்லாமல், வெப்பு தழ

லின் மேனின்று வெந்த தளிர்போல் உயங்கி-வெப்பமாகிய நெருப்பின் மேலேவிழுந்து வெந்த தளிரைப்போல் வாடி, விதியாரைநொந்து-பிரமதேவனை நொந்து, தனியே யானின்றிரங்க-ஒருத்தியாக நின்று பிரலாபிக்க, ஏன் என்பதில்லை இதுவோ உன் நீதிமகனே-ஏன் பிரலாபிக்கிறு யென்பதில்லாமல் நீ கிடக்கிறதான இதுதானோ உனக்கு நியாயமாக முடிந்தது புத்திரனே.

"செங்கோ"
"நீராள"
"நல்லோர்" } என்னும் பாட்டு. (பக்கம் 230. அரிச்சந்திர புராணம்.)

செங்கோலறத்தின் முறையே செலுத்து திறலோன்-தரும நீதிப்படியே செங்கோல் செலுத்துகின்ற சாமர்த்தியனுகியும், எவர்க்கும் உரவோன்-எப்படிப்பட்டவர்களுக்கும் அறிவாற் சிறந்தவனுகியும், வெங்கோப யானை-வெவ்விய கோபத்தைக்கொண்ட யானையையுடைய, விறல் மன்னன்-வெற்றியில் மிக்க நமதரசன், பங்கேருகத்து மலர்போல் விளங்கு வதனு-தாமரை மலர்போலுமுகத்தை யுடைய மகனே, மகிழ்ந்த பாவால்-(தான் மீட்கவந்த) சந்தோஷத்தின் ஆசையினுலே.

நீராள வாவி செறி நாடனைத்து நிறைமாதவற்குதவினும்-நீர் நிரம்பக் குளங்கள் நெருங்கின (கோசல) நாடுமுழுதும் நிறைவான பெரிய தவமுனிவனுக்குக் கொடுத்துவிட்டாலும், பாராளும் நீர்மை தொடர்பற்றதன்று-உலகத்தை ஆளுவதான சம்பத்துத்தன்மை உனக்கில்லாமற் போனதல்ல, படியாளும் எந்தைமுடியில்-(உன் பிதாவைப்போல) ஒரு நாட்டையாளுகிற என் பிதா காலமுடிவுபெற்றுல், காராளர்-வேளாளர்கள், ஏர்கள் கடவோசை யோய்வில்-ஏர்களை ஓட்டுகிற ஓசை ஓயாதிருந்துள்ள, கன்னேசி நாடதனை கன்னேசி நாட்டை, மேல் ஆர் ஆளவல்லர்-(பின்பு நீயல்லது) இனியார் ஆள்வார்கள் ? அவம்-வீண், அரவு-பாம்பு.

நல்லோர் வகுத்த முறையாம் அறங்கள் நாலெட்டிலொன்று குறையேம்-நன்னூலுணர்ந்த பெரியோர்கள் சொன்ன தருமங்கள் முப்பத்திரண்டிலே ஒருதருமமாயினுங் குறையாது செய்தோம். [அறம் 32. ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத்தார்க்குண்டி, பசுவுக்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்ட நல்கல், அறவைச்சோறு, மகப் பெறுவித்தல், மகவு வளர்த்தல், மகப்பால் வார்த்தல், பிறர் துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற் குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர்காத்தல், கன்னிகாதானம் முதலியன.] இல்லோரையற்பமிகழோம்-எளியவர்களைக் கொஞ்சமேனும் இகழ்ச்சிசெய்திலோம், இறுக்கும் இறையன்றி-ஏற உகவேம்—முன்னிருந்தபடி ஆறிலொரு பங்கையல்லது அதிகமாக விரும்பினேமல்லோம், சோல்லோம், மறுத்தும் உரையோம், உரைத்ததுறவோர்கள் புத்தி கடவோம்-பொய்சொல்லியறியோம், கேட்டவர்களுக்கு இல்லை

யென்று மறுத்துச் சொல்லிலோம், துறவறத்தார்கள் சொன்ன புத்தியைக் கடந்து சென்றிலோம், எல்லோர்தமக்கும் இனிதே விளைப்பம் ஏதாகவந்த தீதுவே-யாவருக்கும் நன்மையையே செய்து வந்தோம், (இப்படிக்கிருக்க) எந்தக்காரணத்தினலே (பாம்புகடித்துச் சாதலான) இச்செய்கை வந்தது.

"மறை நீதி" } என்னும் பாட்டுகள் (பக்கம் 231. அரிச்சந்திரபுரா
"என்னுயகன்" } ணம்.)

மறை நீதியுற்ற புறநாடழித்து வருசேனையாள்வது அறியேம்-வேத நீதிப்படியே நடக்கிற அந்நியர் நாட்டைக் கெடுத்து அங்கிருந்துவந்து கூடுவனவான சேனைகளை ஆளும் செய்கையை அறியோம், அறை நீதி முற்று முணரா அமைச்சை யணிவாயில் வைத்தும் அறியேம்-பெரியோர்கள் சொன்ன நீதி முழுதுந் தெரியாத மந்திரியை யெங்களழகிதான அரண்மனைவாயிலிலே வைத்தாளவுந் தெரிந்திலோம், குறையே இழைத்து வினையே விளைத்த குடிவைத்திருந்தும் அறியேம்-குறைவானவைகளையே செய்து பாவச்செய்கைகளையே மேன்மேலும் வளர்க்கிற குடிகளை எங்கள் நாட்டிலே குடிவைக்கவும் தெரிந்திலோம், இறையே-ஓ தெய்வமே! தவத்தின்விளைவே-ஓ எங்கள் தவப்பயனே! எமக்குமிதுவோ விதித்தவிதியே-இப்படி பாம்பு கடித்திறப்பதோ எங்களுக்கு ஏற்படுத்தப்பட்ட வினை.

என்நாயகன்தன் மணிமார்பில் ஏறிவிளையாடுகின்ற எழிலோய்-எனது நாயகனுடைய அழகிதான மார்பிலேறி விளையாடத்தக்க செல்வக்குமாரா, முன்னுய் விளைந்த துயர்தீர வெம்மின் முதலே நடந்த மதலாய்-முன்னே மூண்ட துயர்கள் தீர சுரத்தில் எங்களுக்கு முன்னே நடந்த குழந்தாய், செந்நாய் திரண்டு செறிகான் இருந்து தேளியாது இரங்குமெனை நீ-செந்நாய்கள் கூடி நெருங்கின இந்தக்காட்டிலேயிருந்து மனந்தெளியாமலழுகின்ற என்னைப் பார்த்து நீ, அன்னுய் வருந்தலை எனுதது உன்றன் அறிவுக்கு அடாது-தாயே வருந்தியழாதே யென்று சொல்லாமற் கிடக்கிறது உன் புத்திக்குத் தக்கதல்லவே.

"மறவாளேயிற்று" } என்னும் பாட்டுகள். (பக்கம் 232. அரிச்சந்திர
"பரவாதிகட்டு" } புராணம்.)

மற-கோபத்தையுடைய, (மறம்-சினம், கோபம்), வாளேயிற்று-வாள் போலும் பற்களைக் கொண்டதாய், மணி-ரத்தினத்தைத் தலையிலே கொள்வதான, மாசுணத்தின்-(பெரும்) பாம்பினது, வலியால்-விஷபலத்தினலே, இறந்துள உன்னேடு-இறந்து கிடக்கிற உன்னேடு, இறவாதிருக்கும் அதிபாவி தன்னேடு உறவே தேனக்கருதியோ-சாவாதிருக்கிற அதிக பாவியானவளுடனே உறவு கொள்ளுகிறதினலே என்ன பிரயோஜனமென்று நினைத்தோ! சிவந்தகனிவாய் திறவாய்-உனது சிவந்த கனிபோன்ற வாயைத் திறக்கமாட்டாய், உரைத்தல் செய்கிலாய்-ஒன்றும் சொல்லாதிருக்கிருய், முகத்து விழியாய்-என் முகத்திலும் விழியாதிருக்கிருய், பிறவாத நித்தனடியே வழுத்து பெருமா

னளித்தமகனே-பிறத்தலில்லாத கடவுளது திருவடிகளையே துதிக்கின்ற பெருமையையுடைய அரசன் பெற்ற குமாரா.

பரவாதிகட்கு மிகவே விளைத்தபடிபோல்-ஒரு சமயவாதிகள் மற்றொரு சமயவாதிகளுக்கு மிகவும் இடர் செய்கிறதுபோல், உளத்திலறமே விரவாத துட்டமுனி கௌசிகற்கு வினையே மிழைத்த துறைபோல்-எங்கள் விஷயமாகத் தமது சிந்தையிலே தருமகுணங்களை யெவ்வளவுங் கொள்ளாத கொடுஞ் செய்கையையுடைய கௌசிகமுனிவருக்கு நாங்கள் செய்தகுறைவைப்போல, வறியேனளித்த களிறவி-எளியவளான நான் பெற்ற இளயானை போன்ற புத்திரனுயிரை, கரவேபிடித்து-மறைந்திருந்து வந்து, செற்றகடுவாய் அரவே-போக்கின விஷவாயையுடைய பாம்பே, வறியேன் இழைத்தவினை-கொடியளாகிய யான் செய்த தீவினையால், பகைக்க உனக்கு முளதோ-என்னைப் பகைக்க உனக்கும் மனமுண்டோ.

“அம்ம நீ வருந்தேல்” என்னும் பாட்டு. (பக்கம் 234. நூலாசிரியர் இயற்றியது.)

என்னு-என்று, மூர்த்தம்-விக்ரகங்கள், பொருப்பு-மலை, விந்த வெற்படக்கிய வீறுசால் முனிவன்-விந்த மலையை அடக்கிய வலிமைமிகுந்த அகத்தியன், அணிமை-சமீபம், பிராப்தி-நினைத்த விடத்திற்குப்போதல், தராதலம்-பூதலம், பிராகாமியம்-இச்சித்த பொருள்களை எல்லாம் அடைதல், ஈசத்துவம்-எஜமானத்துவம், வசித்துவம்-யாவரையும் வசியம் செய்தல், அசித்து-ஞானமில்லாத வஸ்துக்கள், சித்து-ஞானமுள்ள வஸ்துக்கள், நவை-குற்றம், அகோராத்திரம்-பகலும் இரவும், முப்புரமெரித்த முன்னவன்-மூன்று புரங்களை எரித்த தலைவனுகிய சிவபெருமான், வேதா-பிரமன், புரந்திடும்-காக்கின்ற, நலிவினை-துன்பத்தை.

“அலைகடல்” என்னும் பாட்டு. (பக்கம் 237. நூலாசிரியர் இயற்றியது.)

அணி-அழகு, அடித்துணை-இரண்டு பாதங்கள், மிடையும்-நெருங்கும், பொறை-பொறுமை, அத்திரம்-அம்பு, அவிர்வது-பிரகாசிப்பது, அம்பலம்-சபை, அரையர்-அரசர், வரைவு-விவாகம், விளித்து-அழைத்து, அவை-சபை, நவை-இகழ்ச்சி, மிழற்றி-சொல்லி, இறவோன்-புருஷன், வரிசிலை-கட்டமைந்தவில், அடல்-வலி, கோசிகர்-விசுவாமித்திரர், நவை-குற்றம், மகம்-யாகம், தடத்த-விசாலமான, கடவியசுரம்-காடடர்ந்த பாலை நிலம், அடது-இலை, கவ்வை-துன்பம், இகம்-இம்மை, அகம்-வீடு, இகத்தலில்-இழிவில்லாத, கரம்-கை, அஞ்சனம்-மை, அம்பு-ஜலம், இப்பி-சங்கு, அந்தகன்-யமன், விதிர்ப்பு-நடுக்கம், கப்பிய-மூடிக்கொண்ட, அகதி-திக்கற்றவன், அருக்கன்-சூரியன், அரவம்-சத்தம், அனுங்க-வருந்த, தொக்க-கூடின, படி-பூமி, ஈமத்தில்-மயானத்தில், தெருள்-அறிவு.

“பொருளுடையேன்” என்ற பாட்டு. (பக்கம் 257. அரிச்சந்திரபுராணம்.)

தமர்-உறவினர், எய்துவேனே-சேருவேனே, தெருள்-அறிவு, அறம்-தருமம், வினையேன்-பாவியான நான், தேயா-குறையாத, அருள்-இரக்கம்.

"துஞ்சிய" என்னும் பாட்டு. (பக்கம் 258. அரிச்சந்திரபுராணம்.)

துஞ்சிய-இறந்துபோன, போந்து-வந்து.

"ஆரென" என்னும் பாட்டு. (பக்கம் 260. நூலாசிரியர் இயற்றியது.)

கன்னல்-கரும்பு, காமரு-சோலை சூழ்ந்த, நவையறு-குற்றமற்ற, வதுவை-கலியாணம், மன்றல்-கலியாணம், துன்றிய-நெருங்கிய, வனிதை-ஸ்திரீ, சதி-தீவினை.

"பொய்யுடை யொருவன்" என்னும் பாட்டு. (பக்கம் 296. நறுந்தொகை.)
சொல்வன்மை-சொல்லுறுதி.

"இருளற" என்னும் பாட்டு. (பக்கம் 298. நூலாசிரியர் இயற்றியது.)

இருள் அற-தெளிவாக, மேதாவியர்-அறிவுடையோர், துகள்-குற்றம், மன்றோரம்-பக்ஷபாதம், பதகர்-பாவிகள், வரோதய்-வரத்தினால் அவதரித்தவனே.

"ஓமா" என்னும் பாட்டு. (பக்கம் 308. அரிச்சந்திர நாடகம்.)

ஓமா-ஓ அம்மா, கோமா மவனே-(கோமான் மகனே)-ராஜ குமாரனே, ஏமா-என் அம்மா, கோண்ணே-கொன்றாய்.

"தாயோடு" என்னும் பாட்டு. (பக்கம் 312. தனிப்பாடற்றிரட்டு.)
சேய்-பிள்ளை, ஆய-ஆகிய, பொற்றலி-(பொன்+தாலி) பொன்னாலாகிய தாலியையுடைய மனைவி.

"அஞ்சல்" "ஆக்கை" } என்னும் பாட்டுகள். (பக்கம் 314. தனிப்பாடற்றிரட்டு.) வரதுங்கபாண்டியனும் அவன் மனைவியும் பாடியன.

கணம்-கூட்டமான, பணகங்கணம்-சர்ப்பகங்கணம், அசைத்த-கட்டின, அம்புலி-சந்திரன், கஞ்சமலர்-தாமரைமலர், கனைகழல்-சப்திக்கின்ற வீரகண்டையை யணிந்த பாதம், மிடறு-கண்டம், மறிமான்-மறியாகியமான், பஞ்சடி சிற்றிடை உமையாள் ஒப்பனைப் பாகனுமாய்-பஞ்சுபோன்ற அடியினையும் சிறிய இடையினையுமுடைய உமையாளாகிய அழகியையுடைய பக்கத்தையுடையவனுமாய், பால்வண்ணர்-(திருநீற்றையணிந்து) வெண்மைநிறம் வாய்ந்த சிவபெருமான், ஆக்கையெனும் புழுக்கூம்பை-உடம்பு என்கிற புழுக்கூட்டை, அணைந்து-சேர்ந்தும், அணையாப்பொருளை-அதில் (புழுக்கூட்டில்) சம்பந்தப்படாத பொருளை, அருளொளியை-கருணையென்கிற ஜோதியை, பராபரத்துக் கப்புறமாம்-(பரம்=முன், அபரம்=பின்) இறந்த காலம், எதிர்காலம் என்னும் காலவரையறையில் அகப்படாத, அறிவை-ஞானரூபனை, நீக்கமற-நீங்குதல் இல்லாத, மூழுமுதலே-பூரணமாகிய முதற்பொருளை, பாக்கியங்கள்-

புண்ணியங்களை, செய்த நம்தம்-செய்தவர்களாகிய நம்முடைய, தவக்குறை கள்-தவக்குறைகளை, முடிக்கும்-முடித்துக்கொடுக்கும், பழவடியார்-பழமை யாகிய அடியார், தமக்கு-அப்படிப்பட்ட அடியார்க்கு, உதவும்-உதவுகின்ற, பசும்-பசுமையாகிய, துணர்-பூங்கொத்துக்களையுடைய, கற்பகத்தை-கற்பக விருட்சமாகிய கடவுளை, வாக்குமன விகற்பத்தால்-வாக்கும் மனமும் ஒற் றுமையாயில்லாமல் வேறு படுதலால், அளவுபடா-எல்லை காணக்கூடாத, ஒன்றை-ஒப்பற்ற வஸ்துவை, வேறு வெளியை-வெட்டவெளியை.

"கையோ" என்னும் பாட்டு. (பக்கம் 315. அரிச்சந்திர புராணம்.)

செழுங்கமலம்-செழுமையாகிய தாமரை மலர், கலாபம்-மயில் தோகை, நுடங்கு-துவளுகிற, விழியோகடைந்த வடிவேல்-கண்களோ கடைந்துகொ ண்ட கூரிய வேல்கள்போலிருக்கின்றன, மையோ சுருண்டகுழல்-சுருண்ட கூந்தல் மேகமோ என்னும்படி யிருக்கின்றது, வனிதை-பெண்.

"தவளத்"
"அழியாத"
"தப்பாது" } என்னும் பாட்டுகள். (பக்கம் 316. அரிச்சந்திர புராணம்.)

தவளத்திருத்தரளநகையும்-வெண்மையான அழகிய முத்துகள் போன்ற பல்வரிசைகளும், தனு-வில், நுதல்-நெற்றி, கவளக்களிற்றரசு-கவளம் உண் கிற யானைமேலேறுகிற அரசன், பழிபூணி-பழியே செய்யத்தக்கவள், உசி யாள்-வருந்தாள், தறுகண்ணரக்கி-அஞ்சாத ராக்ஷசி, பாசமுற்று-கயிற்றால் கட் டுண்டு, கரவாதிருத்தல்-மறையாமலிருத்தல், நடு-நீதி.

"உயிர்க்கொலை"
"வல்லோர்கள்" } என்னும் பாட்டுகள். (பக்கம் 317. அரிச்சந்திர புராணம்.)

கையிற்குறியுரைக்கும்-வதை செய்தவர்களுடைய கையிலுள்ள குறியுஞ் சொல்லும், கட்குறியுரைக்கும்-இரண்டு கண்களிலுள்ள குறியுஞ் சொல்லும், அயிர்ப்பு-சந்தேகம், வல்லபடி-தமக்குத் தோன்றினபடி, மன்னும்-நிலைகொ ண்ட, பழி-பாவம், பகர்வார்-சொல்லுவார்கள், வன்சிறை-வலியதான காவற் கூடத்திலே, இவள் கொலைதான் வதைத்திடுதலாம்-இவள் செய்த கொலை தானே இவளைக் கொல்லும்,

"அங்கேயடித்த" என்னும் பாட்டு. (பக்கம் 318. அரிச்சந்திர புராணம்.)

அலைக்கு-வருந்தச்செய்யும், அலைவு-வருத்தம், பங்கேருகம்-தாமரை.

"பொற்கொடி" என்னும் பாட்டு. (பக்கம் 323. தனிப்பாட்டு.)

பொற்கொடி-பொன்கொடிபோலும் பெண், சமர்-சண்டை.

"பூவார்" என்னும் பாட்டு. (பக்கம் 326. திருவாசகம்.)

பூவார்-கொன்றை மலர் முதலிய புஷ்பங்களை யணிந்த, சென்னி-சிரசை யுடைய, எம்-எம்முடைய, மன்னன் - இறைவன், புயங்கம்-பாம்பணிகளை

யுடைய, பெருமான்-இறைவன், சிறியோமை-சிறியோமாகிய எங்களை, ஓவாது-நீங்காது, உள்ளங் கலந்து-மனத்தில் சேர்ந்திருந்து, உணர்வால்-அறிவினால், உருக்கும்-எங்களை உருகச்செய்கிற, வெள்ளக்கருணையினால்-பெருங்கருணையினால், ஆவாவென்னப்பட்டு-ஐயோவென்று இரங்கும்படி நாம் புண்ணியம் செய்யப்பட்டு, அன்பால்-அன்பினாலே, ஆட்பட்டீர்-அடிமைப் பட்டவர்களாகிய தொண்டர்களே, வந்து ஒருப்படுமின்-வந்து ஒருமனதாக எம்மோடு கூடுங்கள், பொய்விட்டு-இப்பொய்யுலகை விட்டு, உடையான் கழல்புக-இறைவன் திருவடி சேரும்படி, போவோம்-போகலாம், காலம் வந்தது-காலம் வந்துவிட்டது.

"தாமே" என்னும் பாட்டு. (பக்கம் 327. திருவாசகம்.)

யாமார்-யாம் என்கிற அகங்காரம் யார், எமது ஆர்-எமது (என்கிற மமகாரம்) யார், பாசமார்-மாய யார், என்ன மாயம்-இது என்ன மாயைச் செய்கையாய் இருக்கிறது, இவைபோக-இது நிற்க, (இந்த விசாரணை நிற்கட்டும்), பண்டைத் தொண்டர்-பழவடியார், அவன்றன்-இறைவனது, குறிப்பே-திரு உளக் குறிப்பையே, குறிக்கொண்டு-நினைத்துக்கொண்டு, போமாறு-போகும்படி, அமைமின்-வந்து சேருங்கள், பொய் நீக்கி-பொய்யுலகத்தை ஒழித்துவிட்டு, புயங்கன்-சர்ப்பாபரணத்தையுடைய சிவன், ஆள்வான்-என்னை ஆட்கொண்டவனது.

"நல்லோர்" என்னும் பாட்டு. (பக்கம் 331. பட்டணத்தார்.)
"இணக்கம்"-சிநேகம், எழில்-அழகு.

"இம்மை" / "பதியிழந்தனை" } என்னும் பாட்டுகள். } (பக்கம் 332. அரிச்சந்திர புராணம்.)

இம்மை அம்மை வீடு-இப்பிறப்பு, வருபிறப்பு, மோக்ஷம், மறை-வேதங்கள், புலங்கொள-தெளிவாக, மும்மையும்-மூன்றையும், மாணி-விரோதமாக, வெம்மை-வெப்பம், நரகுஉய்க்கினும்-நரகத்திலே வீழ்த்தினும், மெய்ம்மை-சத்தியம்.

பதி-ஊர், நிதி-செல்வம், கட்டுரை-சத்தியம்.

"உலகுயிர்க் கெலாம்" / "நெறியனன்ன" } என்னும் பாட்டுகள். (பக்கம் 336. அரிச்சந்திர புராணம்.)

அலகில்-அளவில்லாத, சீருடைய-சிறப்புடைய, வாய்மை-மெய், ஈடிலதேல்-ஒப்பில்லாததானால், விலகுறமல்-விலகவிடாமல், இறுதியின்மை-சாவாமை, இறுதி-சாவு.

"நாரணன்காண்" என்னும் பாட்டு. (பக்கம் 337. தேவாரம்.)
"பாருருவில்" ஷை (நாலாயிரப் பிரபந்தம்.)
"வேதாந்த" ஷை (இராமலிங்கபிள்ளை அருட்பா.)

நாவாய்-தெப்பம், புனல் ஏற்ற-கங்கையைத் தரித்த, சாரணன்-அருகன்.

எரி-நெருப்பு, கால்-காற்று, விசும்பு-ஆகாயம், ஏர் உரு-அழகிய உருவம், பொன் உருவம்-பொன்னிறமுடைய பிரமன், செந்தீ-சிவந்த நிறமுடைய சிவன்.

மாகடல் உருவம்-கரிய கடலுருவமுள்ள திருமால், முகிலுருவம்-மேக வுருவம்.

"கடல்புடையுடுத்த" என்னும் பாட்டு. (பக்கம் 344. நூலாசிரியர் இயற்றியது.)

கடல்புடையுடுத்த - கடலைப் பக்கத்திற் சூழ உடுத்த, காசினி-உலகம், அடல்-வலிமை, அறைதுவன்-சொல்வேன், நல்கும்-கொடுக்கும், நவம் ஆர்-புதுமையாகிய, தொல்லை-பழமை, தொதுப்பு-முடிவு.

"நித்தியமான" } என்னும்
"பண்ணிய" } பாட்டுகள். } (பக்கம் 347. நூலாசிரியர் இயற்றியது.)

நித்தியமான-சாசுவதமான, நிமலன்-மலமற்றவன், வீறும்-விளங்கும்.

கிளையுறுது-ஒப்பாகாது, ஓர்ந்த-ஆராய்ந்தறிந்த, தொல்லைமாஞாலம் -பழமையாகிய பெரிய உலகம், பொன்-இலட்சுமிக்கு ஒப்பாகிய சந்திரமதி.

"பொய்யாத"
"உண்மை" } என்னும் பாட்டுகள். (பக்கம் 348. நூலாசிரியர் இயற்றியது.)

பொன்றும்வரை-அழியுமளவும், மைஆர் முகில் என-கரியமேகம் போல, வைஆர்-கூர்மையுள்ள, வேல்கண்-வேல் போன்ற கண், உற்ற-கிலேத்த, நன்னெறி-நல்லவழி, உய்யவைக்கும்-பிழைப்பிக்கும், வண்மை-கொடை, வாய்ந்த-உதித்த, வானவர்-தேவர், வழுத்த-துதிக்க, ஒண்மை-பிரகாசம், ஒன்றன பொருள்-கடவுள், வாழிய-வாழ்க.



இந்நாடகத்தை நடிப்பதற்காகப் பாகங்களைத்

தெரிந்தெடுப்பதற்கான

## குறிப்புக்கள்.

மூன்று பாகங்களாக மூன்று இரவுகளில் நடிக்க.

I. பாகம்—அங்கங்கள் I, II, III முழுதும் கொள்க.

II. பாகம்—அங்கங்கள் IV களம் 1 முதல் 10 வரையில் கொள்க.

III. பாகம்—அங்கம் IV களம் 11 முதல் 16 வரையிலும், அங்கம் V. முழுதும் கொள்க.

ஒரே இரவில் நடிக்க.

அங்கம் I. முழுதுங் கொள்க.

அங்கம் II. களம் 1. முழுதுங் கொள்க.

களம் 2. முழுதுங் கொள்க.

களம் 3. முழுதுங் கொள்க.

களம் 4. முழுதுங் கொள்க.

களம் 5. இதில் 37 ஆம் பக்கம் 9-ஆவது வரிமுதல் 40-வது பக்கம் 15-ஆவது வரிவரையில் நீக்கிவிடுக. ஆனால், 39-ஆம் பக்கத்தில், சந்திரமதி சொல்வதில், "நாயக! தேவரீர் கானகஞ் சென்றால், அடியாள் ஏன் பிரிந்து தனியே இருத்தல் வேண்டும்" என்பதைமட்டும் நிறுத்திக்கொள்க.

களம் 6. இதில் 42-ஆம் பக்கத்தில் 2-ஆம் வரியில் "உரிமையாக்குவதற்கான" என்பதை, "உரிமையாக்குகிறேன்" என்று மாற்றிக்கொண்டு மற்றதை விட்டுவிடுக. 43-ஆம் பக்கத்தில் முடிவிலுள்ள 15 வரிகள் தவிர மற்றதை விட்டுவிடுக. 44-ஆம் பக்கத்தில் முடிவிலுள்ள 17 வரிகள் தவிர மற்றதை விட்டுவிடுக. 48-ஆம் பக்கத்தில் 9-ஆம் வரியிலுள்ள "செல்லுகின்றார்கள்" வரையில் வைத்துக்கொண்டு, மிகுந்தபாகத்தையும், 49, 50, 51, 52, 53, 54, 55, 56-ஆம் பக்கங்களையும் விட்டுவிடுக.

அங்கம் III. களம் 1. முழுதுங் கொள்க.

களம் 4. இதில் 70 ஆம் பக்கம் முழுதும் விட்டுவிடுக. 71 ஆம் பக்கத்து முடிவில் 4 வரிகள் தவிர மற்ற வரிகளை விட்டுவிடுக.

களம். 7. இதில் 83 ஆம் பக்கத்தையும், 84 ஆம் பக்கத்தில் முடிவிலுள்ள 3 வரிகள் தவிர மற்றதையும் விட்டு விடுக. 86 ஆம் பக்கத்தில் 11 ஆவது வரிமுதல் முடிவு வரையிலும் 87 ஆம் பக்கத்தில் தலைப்பி லிருந்து முதல் 14 வரிகளையும், 19 முதல் 28 ஆம் வரி வரையிலும் விட்டுவிடுக.

களம் 11. இதில் 104 ஆம் பக்கத்தில் முடிவிலுள்ள 7 வரி கள் தவிர மற்றதை விட்டுவிடுக.

அங்கம் IV. களம். 1. இதில் 111-ஆவது பக்கத்தில் முடிவில் 9 வரிகளை யும், 112-ஆவது பக்கம் முதல் 123-ஆவது பக்கம் முழுவதும் விட்டுவிடுக.

களம். 2. இதில் 123, 124, 125 ஆம் பக்கங்களையும், 126-ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 17 வரிகளை யும் விட்டுவிடுக.

களம் 3. இதில் 128, 129-ஆம் பக்கங்களையும், 130-ஆம் பக்கத்தில் முடிவில் 8 வரிகள் தவிர மற்றதையும் விட்டு விடுக. 137 ஆம் பக்கத்தின் முடிவில் 5 வரி களையும், 138 ஆம் பக்கத்தையும், 139 ஆம் பக்கத் தில், முதல் 12 வரிகளையும், 17 முதல் 22 ஆம் வரி வரையிலும் விட்டுவிடுக.

களம் 4. இதில் 148 ஆம் பக்கத்தின் முடிவிலுள்ள 27 வரி களையும், 149 ஆம் பக்கத்தையும், 150 ஆம் பக்கத் தில் தலைப்பிலிருந்து 27 வரிகளையும் விட்டுவிடுக. 158 ஆம் பக்கத்தில் கடைசி இரண்டு வரிகளையும், 159 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 2 வரி களையும், 6 முதல் 22 வரி வரையிலும் விட்டுவிடுக. 162 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 18 வரி களை மட்டும் நிறுத்திக்கொள்க. 163 ஆம் பக்கத் தில் தலைப்பிலிருந்து முதல் $17\frac{1}{2}$ வரிகளையும் விட்டுவிடுக.

களம் 6. இதில் 189 ஆம் பக்கம் 5 ஆம் வரி தொடங்கி அந்தக் களம் முழுதும் விட்டுவிடுக.

களம் 9. முழுதும் கொள்க.

களம் 11. இதில் 234, 235 ஆம் பக்கங்களையும், 236 ஆம் பக்கம் தலைப்பிலிருந்து 17 வரிகளையும், 237 ஆம் பக்கம் முடிவில் 21 வரிகளையும், 238, 239, 240, 241 ஆம் பக்கங்களையும், 242 ஆம் பக்கம் தலைப்பிலிருந்து 17 வரிகளையும் விட்டுவிடுக; 18 ஆவது வரியில் 'ஆம்' என்பதை நீக்கிவிடுக.

களம் 12. முழுதுங் கொள்க.

களம் 13. இதில் 268 ஆவது பக்கத்தில் முதல் 16 வரிகள் தவிர மற்றவைகளையும், 269, 270, 271, 272 ஆம் பக்கங்களையும், 273 ஆம் பக்கத்தில் முதல் 8 வரிகளையும் 20 ஆவது வரிமுதல் 26 ஆவது வரிவரையிலும், 274 ஆவது பக்கம் முடிவில் 7 வரிகளையும், 275 ஆம் பக்கமுதல் களம் முடிவு வரையிலும் நீக்கிவிடுக.

அங்கம் V. களம் 1. முழுதுங் கொள்க.

களம் 3. இதில் 314 ஆம் பக்கத்தில் முடிவில் 3 வரிகளை விட்டு விடுக. 315 முதல் 325 ஆவது பக்கம் வரையிலும், 326 ஆம் பக்கத்தின் முடிவிலுள்ள 10 வரிகள் தவிர மற்றதையும் விட்டுவிடுக.

களம் 4. முழுதுங் கொள்க.

குறிப்பு:—குறிக்கப்படாத களங்களை விட்டுவிடுக.